460/4

உ

குருப்யோ நம:

திருக்களராண்டவு சென்றும்

ஸ்ரீ கோவிலூர்,

# வீரசேகர ஞானதேசிகர்

புராணசாரப்பஞ்சரத்நமும்

தோத்திரப்பத்தும்.

மன்னார்குடி பாரதி பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.




உ

குருப்யோ நம:

திருக்களராண்டவ ரென்னும்

ஸ்ரீ கோவிலூர்,

# வீரசேகர ஞானதேசிகர்

புராணசாரப்பஞ்சரத்நமும்

தோத்திரப்பத்தும்.

மன்னார்குடி பாரதி பிரஸில் பதிப்பிக்கப்பட்டது.

வீரசேகர புராணம் பாடிய

ஸ்ரீ வீரசேகரஞான தேசிகர் பாதசேகரன்

காசிவாசி சிவானந்தனால் பாடப்பட்டு

ஷை

ஸ்ரீ வீரசேகர பாதமெய்த்தொண்டர்

பசுமடம்

அருணாசலசுவாமிகளால்

பதிப்பிக்கப்பெற்றது.

உ

குருப்யோ நம:

திருக்களராண்டவர் என்னும்

ஸ்ரீ கோவிலூர்

வீரசேகர புராணசாரப் பஞ்சரத்நம்.

குருவணக்கம்.

உலகெலாந்தொழ லுமைபதி யொருவன்பாற் சேருந்
தலமெலாந் தருவன வவனொருவனே தருவன்
அலகிலாவருட் குரவனே யாகுவ னவனும்
புலமெலாமொரு மித்தவன் பொன்னடி பணிவாம்.

வீரசேகர வீதமாமுனி, தீரபாதமுந் தேடுவாரவர்,
பாரமேறுவர் பாவமார்கடல், சேரவீடுவிதேகியாவரே.

## குருபரம்பரை வாழ்த்து.

பரமாதி பரம்பரையின் பயனாகும்
பரப்பிரம பதத்தையீந்த
திரஞான வுகந்தலிங்க தேசிகன்றன்
மரபதனிற்றிகழத்வைதக்
குரவோர்கள் முதற்குரவன்
முத்திராமன் குலவு கோவிலூரின்
இரவியாய் விளங்கி மிக நீடூழி
தழைத்திடுக வென்று மாதோ.



சீர்மலியும் பாண்டியதிற் செல்வ மோங்கிச்
சிறப்பாரும் வணிகர்மிகச் செழிக்கு நாட்டில்
பேர்மலியு முமையருணா சலனார் தன்பாற்
பேரன்பில் ஞானப்பாற் பெற்றான் போலப்
பார்மலியுங் கீலகத்தா வணியா மாதம்
பன்னு புனர்பூசமதின் வெள்ளிவாரம்
நேர்மலியும் வீரசே கரனார் தோன்றி
நிமலமதி யானீடு தமிழுமோதி

அருளாதி சீலமெலா மடைவி லேய்ந்து
வானடியா ரன்போடா லயமுமேற்றிப்
பொருடேடு நாட்டமின்றிப் புண்யந் தேடிப்
புகறருண மணநீத்துப் புனிதனுகிக்
குருநாடி வெளிக்கிளம்பிக் கோவிலூர் போய்க்
குருவாகச் சிதம்பரனைக் கொண்டு போதந்
தருசீட னுகித்தத் துவநூ லோர்ந்து
தருமாதி யுகந்தனது தானைச்சேர்க்கே



இச்சையறு சந்யாசம் பெற்று வேற்று
வினிதுண்டு சுற்றருளை யேற்காதேகி
மிச்சமுறு ஞானநூல் குருபா லாய்ந்து
மேன்மைமலி யிராமேச்சு வரத்தைமேவி
அச்சமுறு நடையிற்சிதம் பரத்தைச் சார்ந்து
வங்குபொன் னம்பலவன் மடத்தையேய்ந்து
உச்சமெழு தவவிரத வொழுக்கம் வாய்ந்து
வொன்றுவிக்க வவனென்றிக் கோவிலூரை

அரிதாய வத்துவித மடத்தை யேற்று
வானுல யம்மாற்றி யம்மையாதி
விரிவாக மூர்த்திகள் கும்பாபி டேகம்
வினையத்தாற் செய்துமே விளங்கச் சீலம்
பெரிதாய மடந்திருத்திப் பேரன் பேர்கள்
பேறடையப் பிரமபத மருளா லூட்டிப்
பரிவாரின் பவமாய்க்கும் பழிக்கு மேனைப்
பாமாற்கும் பவமீயும் பான்மையேய்ந்தே



புகழ்சோழ நாடடைந்து புகலியோனும்
போற்றுதிருக் களாதனைப் பொருந்தி யாங்கே
அகலாலயப் பணியை பன்பா லாற்றி
யருட்டீர்த்த மதுதிருத்தி யவ்வூராண்டு
சுகமாகக் கும்பாபி டேக மாற்றிச்
சொல்விரோதி கிருதுவில் வைகாசி மாதஞ்
சகநாடு மைந்தேருந் தலத்தி லோடுஞ்
சமயத்திற் சங்கரனின் பதத்தைச் சார்ந்தான்

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் புராணசாரம்
முற்றிற்று.

## ஸ்ரீ வீரஞானதேசிகர் தோத்திரப்பத்து.

சிவனடி யார்கள் செல்வமே சிவமே
சிவப்பணித் தலைவனே சேர்ந்தோர்
பவகடற் புணையே பக்குவர் ஞானப்
பரிதியே பரவுப காரத்
தவவுடற் றாங்குந் தாயினு மினியாய்
தமியனை யாள்வது மென்றோ
அவமிடாத் தலமாந் திருக்கள ராண்ட
வண்ணலே வீரதே சிகனே.

அருளா னன்பு வகப்புறத் துறவு
வறிவுசா லண்ணலே யன்பின்
றிருவருட் டெளிவே தீவினை களைந்தோய்
திகழ்மறை முடிவையுந் தெரித்தோய்
இருவினை தேய வென்றனக் கருளி
யென்றுநீ யாண்டுகொள் வதுவே
கருமவி தலமாந் திருக்கள ராண்ட
தன்மையோய் வீரதே சிகனே.



புத்தியுள் விளக்காம் பூரணப் பொருளே
புண்ணியம் போற்றுவோர் புகலே
சித்தியின் றேற்றே சிவகுணஞ் செறிந்த
சித்தனே சித்தமார் தேனே
முத்தியின் முதலே முனிகண வானே
மூடனே யாள்வது மென்றோ
நித்திய தலமாந் திருக்கள ராண்ட
நிருமலா வீரதே சிகனே.

ஞானமே ஞால ஞானநன் மணியே
ஞானிக ளுதனே ஞான
மோனமே முடிவே முழுமதி மதியோய்
முப்பத முடிவதாய் நின்ற
தானமே தவமே தவத்தவர் தலைவா
தவறனை யாள்வது மென்றோ
ஊனமீர் தலமாந் திருக்கள ராண்ட
வொருவனே வீரதே சிகனே.



அரியதாம் வீட்டை யடைந்தவா வடைவோர்க்
காருயி ராகிய துணையே
பெரியனே பெரிதிற் பெரியதாம் பிரமப்
பேறனே பிறவெலாக் கருமக்
கரியனே கண்ணே கண்ணுளோர் மணியே
கடையனை யாள்வது மென்றோ
உரியதோர் தலமாந் திருக்கள ராண்ட
வும்பனே வீரதே சிகனே.

குணமெனுங் குன்றே குன்றின்மேல் விளக்கே
குணாதீத னாகிய குணியே
மணமலர் போல மனத்துளே யுறைவோய்
மாயையின் றோற்றமா மனைத்துங்
கணமதின் மாறல் கண்டவோய் காட்டிக்
கடையனை யாள்வது மென்றோ
திணமதார் தலமாந் திருக்கள மாண்ட
தேவனும் வீரதே சிகனே.



வீரனே விமலா விளங்கிழை யிடையார்
வேட்கையும் விட்டற நீக்க
தீரனே தீரத் திளகரா திரண்ட
தித்திப்பிற் றெவிட்டாத் தேவ
சாரமே சமமே சமழுளார் தமமே
சழக்கனை யாள்வது மென்றோ
நீரமார் தலமாந் திருக்கள மாண்ட
நேர்மையோய் வீரதே சிகனே.

புகழுளோய் புகழிற் புத்தியே யற்ற
புண்ணியா புன்புலா லுடம்பை
யிகழுவோ யிகழு மேற்றலா யேற்போ
யிருவினை யொப்பனு மென்றுந்
திகழுவோய் தெருளோய் தீவினை தேய்த்துத்
தீயனை யாள்வது மென்றோ
நிகழுசீர் தலமாந் திருக்கள ராண்ட
நித்தியா வீரதே சிகனே.



என்று முன்னடியே யேற்றவு மேற்றி
யிடையின்றி வாழ்த்தவும் வாழ்த்திக்
கன்றுவா வென்னக் கனியவுங் கனிந்து
கலக்கவுங் கலந்துவா னந்தம்
ஒன்றதாய் நிற்க வுனதருளீந்து
வுழுத்தனை யாள்வது மென்றோ
நன்றுசார் தலமாந் திருக்கள ராண்ட
நாதனே வீரதே சிகனே.

ஒன்றதே பொருளா யொன்று மெய்யுணர்வா
யொன்றதே முத்திசா தனமாய்
ஒன்றதே பிறப்பா யொன்றதே மறக்கா
தொன்றதா முன்னடி யதனில்
ஒன்றதே யாகு மொருமுத்தி யருளி
யொருவனை யென்றுநீ யாள்வாய்
மன்றதே யாகுந் திருக்கள ராண்ட
மாண்பனே வீரதே சிகனே.

முற்றிற்று.

வீரஞானதேசிகர் திருவடிவாழ்க.

